# சின்னப் பூவே
# மெல்லப் பாடு . . .



கவிஞர் வயலூர்சண்முகம்

# சின்னப் பூவே மெல்லப்பாடு...

வயலூர் சண்முகம்



➢ நூலின் பெயர் : சின்னப் பூவே மெல்லப்பாடு

➢ நூல்வகை : திரையிசை பாடல்கள்

➢ ஆசிரியர் : வயலூர் சண்முகம்

➢ முதற்பதிப்பு : 2006

➢ பக்கம் : 120

➢ விலை : ரூ.40/-

➢ அட்டை வடிவமைப்பு : ஜெய்

➢ கோட்டோவியங்கள் : குருபாலா

➢ ஒளி அச்சு : கிரண் கிராஃபிக்ஸ்,
சென்னை - 14.

➢ அச்சு : பாம்பன் பிரிண்டர்ஸ், சென்னை - 14.

➢ பதிப்பாளர் : நாதன்

➢ விற்பனை உரிமை : நிவேதிதா புத்தக பூங்கா
எண்.14, இரண்டாம் தளம்,
பீட்டர்ஸ் சாலை,
இராயப்பேட்டை,
சென்னை - 600 014.
📱 : 9282231997



17/9, சுவாமி ஆச்சாரித் தெரு,
இராயப்பேட்டை, சென்னை - 14.

# பதிப்புரை

'மனிதர்கள் மறையும்போது அவர்களின் உலகங்களும் றைகிறது என்பார்கள்.' - இது படைப்பாளிகளுக்குப் பாருந்தாது என்பது என் பணிவான கருத்து.

கவிஞர் வயலூர் சண்முகம் மிகச் சிறந்த கவிஞர். ாரதிதாசன், அண்ணா, உவமைக் கவிஞர் சுரதா நம் மிழக முதல்வர் டாக்டர் கலைஞர் போன்ற மிழறிஞர்களால் பாராட்டப்பட்டவர். டாக்டர் கலைஞர், _வமைக் கவிஞர் சுரதா ஆகியோரின் இலக்கிய ண்பர்குழுவில் முக்கியமானவர்.

இருப்பினும் இந்த தமிழ்க் கவிஞனின் படைப்புகள் ாலம் கடந்தே நூலாக்கம் பெறுகின்றன. சென்ற வருடம் அவருடைய 'தெற்கு ஜன்னலும் நானும்' என்ற கவிதைத் தாகுப்பை முதல் நூலாக வெளியிட்டேன். இப்போது ந்த 'சின்னப் பூவே மெல்லப்பாடு' வெளிவருகிறது. காலம் டந்த வெளியீடு என்றாலும் எல்லா காலத்துக்கும் ற்றவையாக இவரது படைப்புகள் புதுமை செய்கின்றன ன்றே எண்ணத் தோன்றுகிறது.

சிறந்த குழந்தை இலக்கிய நூல்கள் வெளிவருவது நறைந்து விட்டது என்று நிலவும் குறையைப் போக்கும் பண்ணம் இந்தக் குழந்தைகள் நூல் அமைந்துள்ளது.

பிஞ்சு இதழ்களில் ஒட்டிக் கொள்ளும் இயல்பான ந்தங்கள் - எளிய வார்த்தைகள் புதிய பாடுபொருள்கள் ன்று குழந்தை இலக்கியத்துக்கு செம்மை சேர்க்கும் வகையில் அமைந்துள்ள கவிஞர் வயலூர் சண்முகத்தின் இந்தப் படைப்பை நூலாக்குவதில் பெருமிதமடைகிறேன்.

அன்புடன்

நாதன்

# தாய்ப்பாலோடு கொஞ்சம் தமிழ்ப்பால்...

காலத்தின் ரசவாதம் சில நேரங்களில் ஆச்சர்யமாக இருக்கிறது. சில நேரங்களில் அதிசயமாக இருக்கிறது. பல நேரங்களில் 'இது எப்படி சாத்தியம்?' என வினாவெழுப்புகிறது. 'ஆம்! வாழ்க்கை என்றால் இப்படித்தான்.... உலக நியதி இதுதான்' என்று அதுவே விடையும் தருகிறது.

சிறுவயதில் கொக்கு, அணில், கோகுலம், அம்புலிமாமா இதழ்களெல்லாம் திகட்டாத விருந்தாக இருக்கும். என் தந்தையார் கவிஞர் வயலூர் சண்முகம் எழுதி, அக்கால கட்டத்தில் என்னைக் கவர்ந்தவையாக இருந்தன அவரது குழந்தைப்பாடல்கள். இன்று என் மகள் நேசிகாவும் தன் தாத்தாவின் பாடல்களைப் படித்து ரசிக்கிறாள். ஒரு படைப்பு என்பது காலங்களைக் கடந்து வாழும் என்பதற்கு இதைவிட என்ன சாட்சி வேண்டும்?

எழுதப்பட்டு முப்பது வருடங்கள் கடந்து நூல்வடிவம் பெறும் இந்த குழந்தைப் பாடல்கள் இன்றளவும் எளிமையாகவும், இயல்பாகவும், நீதிசொல்லும் விதமாகவும், இன்றைய காலத்தின் தேவையாகவும் இருக்கின்றன.

இது எழுதப்பட்ட அதே காலகட்டத்தில் எனது தந்தையார் கவிஞர் வயலூர் சண்முகத்தின் பள்ளித் தோழரான, இன்றைய தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள், அன்று என் தந்தையாரைக் காரைக்கால் வீட்டில்

சந்தித்துவிட்டு சென்றபின் கோவை ரயில் பயண வழிநிலையில், ஒரு கடிதம் எழுதினார். அந்த நட்பெழுத்துக்கள் இப்போது என் நினைவுக்கு வருகின்றன...

'தமிழுக்கும், தமிழருக்கும், தமிழகத்துக்கும், தாங்கள் ஏதாவது செய்திட வேண்டுகிறேன். தங்கள் எழுத்தாற்றல் கொண்டு!'

தமிழ் இலக்கியச் சூழலில் தமிழ்க் குழந்தைகளை நவீன காட்சி ஊடகங்கள் இன்று ஆக்ரமித்துக் கொண்டுள்ளன. குழந்தைப் படைப்புகளை செம்மையாய் எழுதுவோர் குறைந்து வருகின்றனர்.

இக்கால கட்டத்தின் தமிழ் வளர்ச்சித் தேவையாக இந்த எளிமையான இனிமையான குழந்தைப் பாடல்கள் விளங்கும் என்பது எனது நம்பிக்கை. நாளைய சிற்பிகளான இன்றைய குழந்தைகளுக்கு தாய்ப்பாலோடு தமிழ்ப்பால் ஊட்ட இப்பாடல்கள் உதவும் என்பது உறுதி.

முத்துமுத்துக் கையெழுத்தில் எனது தந்தையாரின் படைப்புகளை படி எடுத்து வைத்திருந்த என் சகோதரி மாலாவையும், குழந்தைகளுக்கான கோட்டு மொழியில் உள் ஓவியங்கள் வரைந்து தந்த தம்பி திருவையாறு குருபாலாவையும், எனது தந்தையாரின் நூல்களை ஈடுபாட்டுடன் தொடர்ந்து வெளிக்கொணரும் நண்பர் 'முற்றம்' நாதன் அவர்களையும் அன்புடன் இங்கு நினைவுகூர்வதில் மகிழ்கிறேன்.

நேசமிக்க

**எஸ். ராஜகுமாரன்**

புதிய எண் : 14, சிவாஜி தெரு
தி.நகர், சென்னை - 17.
செல்பேசி : 9840124602

# பூசிப்போம் !

தேசக் கொடியை
தியாக மணிக்கொடியை -
நேசக் கொடியை
நிதநிதமும் - பூசிப்போம்!

கெடுக்கும் பகை நீக்கி
கீர்த்திமிகு வாழ்வைக்
கொடுக்கும் நமது கொடி!



# திருவிழா!

எங்கள் ஊரில் திருவிழா!
    ஏழு நாட்கள் பெருவிழா!
தங்க மாரி அம்மனின்
    தரிச னத்தால் மகிழுவோம்!

தாள மேள நாயனம்,
    தப்பு தாரை ஒலிக்கவே,
நாளும் நாளும் வைபவம்
    நடக்கும் காட்சி அருமையாம்!

இரவில் அம்மன் ஊர்வலம்!
    இல்லம் தோறும் அர்ச்சனை!
சரசர வாண வேட்டுகள்!
    சதங்கை குலுங்கும் ஆட்டங்கள்!

கடைசி நாளில் தீமிதி!
    காவடி நடனக் கோலங்கள்!
கடைகள் வரிசை எத்தனை!
    காணக் காண வேடிக்கை!

பக்தர் கூட்டம் எங்குமே
    பரவசம் ததும்பிப் பொங்குமே!
சக்தித் தாயை வணங்கினால்
    சகல வரமும் கிட்டுமே!



## ஓடி வா!

கண்ணே! தமிழே! ஓடிவா!
    காலைப் பூவே! ஓடி வா!
பெண்ணே! சிட்டே! ஓடிவா!
    பேசும் நிலவே ஓடி வா!

அழகே திருவே! ஓடி வா!
    அன்பே! பண்பே! ஓடி வா!
பழமே! தேனே! ஓடிவா!
    பாட்டைக் கேட்டே ஆடவா!

முத்தே! சுடரே! ஓடிவா!
    முகிலே! மழையே! ஓடிவா!
சொத்தே! சுகமே! ஓடிவா!
    சுனையே! பொழிலே! ஓடிவா!



# கோழி!

கோழி வந்து கூவுது!
    கொல்லை முழுதும் தாவுது!
சோழி போல வெள்ளை
    சோதாக் கோழி முழிக்குது!

குப்பைக் கிளறிப் பார்க்குது!
    கொத்திப் புழுவைத் தீர்க்குது!
சப்பைக் கோழி பறக்குது!
    சேவல் கோழி துரத்துது!

தென்னை மட்டைச் சரியுது!
    'திடுக்'குன்னு கோழி நடுங்குது!
முன்னும் பின்னும் நகருது!
    மூலை வழியாய் மறையுது!



## ஏ, பி, ஸி, டி, பாட்டு

ஏ, பி, ஸீ, டி, –
இறைவனை வணங்கு, தினமும் பாடி!

ஈ, எஃப், ஜீ, ஹெச், –
இங்கிலீஷ் படித்தால் நல்ல பேச்சு!

ஐ, ஜே, கே, எல், –
அறிவே உனக்கு வைரக்கல்!

எம், என், ஓ, ப்பீ,
இனிய வாத்தியம் டும்டும் பீப்பீ!

க்யூ, ஆர், எஸ், ட்டி,
கணக்கு தெரிந்தால் பணமும் கெட்டி!

யூ, வீ, டபுள்யூ, எக்ஸ், ஒய், –
எதையும் கவனமாய் ஒழுங்காய்ச் செய்!

இஜட் என்பதே கடைசி எழுத்து –
இவற்றை கவனமாய் நினைவில் நிறுத்து.

✣ ✣ ✣

# அழகே புதுமை!

சித்திரம் வரைவாய்!
சித்திரம் வரைவாய்! சின்னத்தம்பி!
பத்திரம் பதமாய்
பாங்காய் இருந்தே படத்தை
வரைவாய்!

சிங்கம் போலவும், சிறுத்தை போலவும்,
சங்கைப் போலவும், சாமி போலவும்,
எங்கும் காணும் இயற்கை அழகை
எடுத்தே எழுதி இனிதே வரைவாய்!

பூனை போலவும் பூவைப் போலவும்,
பானை போலவும் பாலம் போலவும்,
ஆனை போலவும், அன்னம் போலவும்,
அழகாய் வரைவாய் அருமைத் தம்பி!

அழகை எழுதிப் பழகு
அழகை அள்ளிப் பருகு!
பழகப் பழக இனிமை!
பாரில் அழகே புதுமை!



## வெள்ளிக்கிழமை!

வெள்ளிக் கிழமை மாலை!
விளக்கு வைக்கும் நேரம்!
பிள்ளைகள் எல்லாம் கூடுவோம்!
பிரார்த்தனைப் பாடல் பாடுவோம்!

அம்பாள் கிருபை வேண்டியே,
"அருள்வாய்!" எனவே வேண்டுவோம்!
நம்பும் பக்தி தன்னால்
நலமே பெறுவோம் திண்ணம்!

கல்வி கேட்போம் தாயை!
கருணை கேட்போம் தாயை!
பல்விதமான வெற்றிகள்
பலிக்கச் செய்வாள் தேவி!

திருமகள் தன்னைப் பணிவோம்!
செல்வச் சுகங்கள் பெறுவோம்!
ஒருமன தாகத் துதித்தால்
உலக வாழ்வே இன்பம்!



# அதிசயக் கோழி!

பாலு மாமா வாங்கி வந்தப்
பட்டணத்துக் கோழி! - அது
பச்சை நிறம் பளபளக்கும் பாங்கான கோழி!

காலும் தலையும் ஆட்டி ஆட்டிக்
கண்ணைப் பறிக்கும் கோழி! - அது
காட்டுநரி வந்தாலும் பறந்து ஓடும் கோழி!

அட்டைப் பெட்டிக் கூண்டுக்குள்ளே
அடைந்து கிடக்கும் கோழி! - அது
ஆகாரம் தின்னாத அதிசயத்துக் கோழி!

முட்டை மூன்று இட்டு விட்டு
மூக்க சைக்கும் கோழி! - அது
முன்னும் பின்னும் நடை நடக்கும் விந்தையான
கோழி!

குப்பைமேடு, கூரை ஏறிக்
கூவிடாத கோழி! - அது
குஞ்செதுவும் பொறித்திடாத சன்யாசிக் கோழி!

துப்பு கெட்டு வேலி தாண்டித்
துள்ளிடாத கோழி! - அது
சுதந்திரமாய் வாழுகின்ற உல்லாசக் கோழி!



## விசிறி!

விசிறி அழகு விசிறி!
விதவித மான விசிறி!
அசதி களப்பைப் போக்கி
ஆனந்தம் கொடுக்கும் விசிறி!

மேலே சுழலும் விசிறி
மின்சாரம் இயக்கும் விசிறி!
வாலு நாலு கொண்டே
வட்டமாய்ச் சுழலும் விசிறி!

மட்டை ஓலை விசிறி!
மடக்கிச் சுருட்டும் விசிறி!
அட்டை யாலே விசிறி!
ஆகா எத்தனை விசிறி!

விளக்கு வைத்த விசிறி!
மேசை ஏறும் விசிறி!
தளுக்குப் பெண்ணின் கையிலே
டால டிக்கும் விசிறி!

காற்று கொடுக்கும் விசிறி!
குளிர்ச்சி கொடுக்கும் விசிறி!
நேற்றும் இன்றும் நாளையும்
நிலைத்து நிற்கும் விசிறி!

✣ ✣ ✣

## விந்தை விளக்கு!

அந்தி வந்தே இருட்டிடினும்
அஞ்சிடேன், நான்தான் அஞ்சிடேனே!
விந்தை செய்யும் விளக்கொன்றே
வெளிச்சம் தந்திடும் என்றனுக்கே!

பகலில் அந்த விளக்கதனை
பார்த்தால் எதுவும் தெரியாது!
மிகவே முயன்றே ஏற்றிடினும்
வீண்தான்! அதுவோ, எரியாது!

தானே இரவில் அவ்விளக்கு
சாந்தமாய் மௌனமாய் எரிந்திடுமே!
நானே சொல்லவா, அவ்விளக்கை?
நல்லது! மின்மினிப் பூச்சியேதான்!



## யானை!

யானை கருத்த யானை!
 எதிலும் பெரிய யானை!
சேனை நடத்தும்யானை!
 தெய்வக் கோயில் யானை!

ஆடி நடக்கும் யானை!
 அல்வா தின்னும் யானை!
பாடி அடிக்கும் மணியைப்
 பாங்காய் அணிந்த யானை!

சின்னக் கண்கள் கொண்டது!
 துதிக்கைக் கையும் கொண்டது!
பென்னம் பெரிய காது
 முறத்தைப் போலக் கொண்டது!

யானை என்றால் யானை!
 அழகு தந்த யானை!
பானை வெல்லம் தேங்காய்ப்
 பழங்கள் தின்னும் யானை!



## கிளி!

சின்ன சின்னக் கிளியாம்!
    திதிக்கப் பேசும் கிளியாம்!
தென்னை மரத்தின் பொந்திலே
    தினமும் வாழும் கிளியாம்!

நல்ல நல்ல கிளியாம்!
    நமது தோழன் கிளியாம்!
கொல்லை முழுதும் சுற்றிக்
    கொஞ்சிப் பேசும் கிளியாம்!

கோவைப் பழம்போல் மூக்குக்
    கொண்டப் பச்சைக் கிளியாம்!
ஆவ லோடு காண
    அழகு தந்திடும் கிளியாம்!



## பொம்மை!

எங்கள் வீட்டுக் கண்ணன் பொம்மை!
எவ்வளவு அழகு பாத்தியா?
தங்கத் தாலே புல்லாங்குழலை
தாங்கி ஊதும் கண்ணனாம்!

பால நீலக் கண்ண னுக்கே
பவள வாயைப் பாத்தியா?
மேலே மின்னும் தலையின் கிரீடம்
மினுமி னுக்குது பாருடா!

ஆடி ஓடி விளையா டுவோமே
அழகுக் கண்ணன் போலவே?
பாடி ஓடி விளையா டுவோமே!
பாலக் கண்ணன் போலவே!



## மோட்டார் கார்!

பூம்பூம் மோட்டார் கார்!
போகுது போகுது பார்!
புத்தம் புதுவித
மெத்த சொகுசாகப்
பூம்பூம் மோட்டார் கார்!
போகுது போகுது பார்!

பச்சை வர்ண கார்!
பறக்குது பறக்குது பார்!
பாடும் ரேடியோ,
ஆடும் பொம்மை,
வச்ச காரு போகுது!
வளையா மலேயே போகுது!

மஞ்சள் வண்ணக் கார்!
மனதை மயக்கும் பார்!
மனித பொம்மை
குரங்கு பொம்மை
வச்சகாரு போகுது!
வழுக்கிக் கொண் டோடுது!

✢ ✢ ✢

# ரோஜா மாமா!

'ரோஜா மாமா' நல்லவர்!
ரொம்ப ரொம்ப நல்லவர்!
ராஜா போல தேசத்தை
ராவும் பகலும் காத்தவர்!

அறிவும் அழகும் கொண்டவர்!
அன்பும் பண்பும் கொண்டவர்!
நெறியும் குறியும் உடையவர்!
நீதி நேர்மை உடையவர்!

கொழுந்துக் குழந்தைக் குலத்தைக்
கோயி லாகத் தொழுதவர்!
பழத்தில் ஆப்பிள் போன்ற
பண்டித நேரு இனியவர்!



# புல்லாங்குழல்!

ஆற்றுப் பக்க மிருந்து
காற்று பாடும் பாட்டோ?
காணாமலே கேட்குது புல்லாங்குழல்!
கண்ணன் என்னும் தெய்வ
மன்னன் ஊதிய புல்லாங்குழல்

நேற்று போல இன்றும்
ஆற்றுப் பக்க மிருந்தே
காணாமலே ஊதுது புல்லாங்குழல்!
காடு மலைகள் கடந்தே
பாடும் பூவோ புல்லாங்குழல்?

ஆற்றுப் பக்க மிருந்தே
சோற்றைத் தின்ற நிறைவில்
மாட்டுக் கார நீலன்தான்
மகிழ்ந்தே ஊதும் புல்லாங்குழல்!
மனதைத் தழுவும் புல்லாங்குழல்!

நேற்றுப் போல இன்றும்
இன்று போல நாளையும்
நெகிழ வைக்கும் புல்லாங்குழல்!
நினைவில் நிற்கும் புல்லாங்குழல்
நெஞ்சில் நிறையும் புல்லாங்குழல்

## தபால்காரர்!

கையில் கடிதம் எடுத்து வருவார்!
காலை மாலை வந்து போவார்!
பையைத் தோளில் மாட்டியிருப்பார்!
பணமும் நமக்குக் கொண்டு வருவார்!

அன்புச் சேதி கொண்டு வருவார்!
அச்சச் சேதி கொண்டு வருவார்!
இன்பச் சேதி கொண்டு வருவார்!
இழவுச் சேதி கொண்டு வருவார்!

செய்தித் தாளைக் கொண்டு வருவார்!
சிப்பக் கட்டு கொண்டு வருவார்!
வெய்யில் மழையைப் பார்க்க மாட்டார்!
வேலை ஒன்றே கண்ணா யிருப்பார்!

முண்டாசு தலையில் கட்டி யிருப்பார்!
முத்திரைப் பட்டை போட்டி ருப்பார்!
கண்டால் நம்மை வணங்கி நிற்பார்!
கண்ணிய மாகத் தொண்டு செய்வார்!



## வண்டி!

தாரு ரோடு மேலே போகும்
காரு வண்டி இல்லே! – இது
காரு வண்டி இல்லே!

சிமிண்ட் ரோடு மேலே போகும்
சீமை வண்டி இல்லே! – இது
சீமை வண்டி இல்லே!

காட்டு விறகு ஏத்திப் போகும்
கட்டை வண்டி இல்லே! – இது
கட்டை வண்டி இல்லே!

மாப்பிள்ளை பொண்ணு ஏத்திப் போகும்
மாட்டு வண்டி இல்லே! – இது
மாட்டு வண்டி இல்லே!

தந்த வண்டி, தங்க வண்டி
சாலை வண்டி இல்லே! – இது
சாலை வண்டி இல்லே

சொந்த வண்டி சோக்கு வண்டி
துள்ளி வருகுது பாரு! – கொஞ்சம்
தள்ளி நின்னு பாரு!

**டபடபா! டபடபா!!**
**டபடபா! டபடபா!!!**



## மிக அழகு!

அன்னம் போல மிதந்தசைந்தே
 ஆற்றில் செல்லும் படகினும்
மின்னும் வானம் தனில் மிதக்கும்
 மேகக் கூட்டம் மிக அழகாம்!

ஆற்றைக் கடக்க இருகரையை
 அணைத்தே எழுப்பும் பாலத்தினும்,
காற்றில் கரையா வானவில்
 காணக் காண மிக அழகாம்!

மெத்தப் படித்து பெற்றிட்ட
 மேலாம் தெளிந்த அறிவினினும்
சத்த மின்றிச் செய்கின்ற
 தரும அன்பே மிக அழகாம்!



## கடற்கரை!

நீள நீளக் கடற்கரை!
நீலக் கடலின் மேற்கிலே!

தாளம் போடுது அலைகளே!
தாவிக் குதிக்குது அலைகளே!

காற்று வீசுது குளுகுளுன்னு!
கண்ணைப் பறிக்குது புல்வெளி!

ஆற்றுத் தண்ணீர் கலக்குது!
அலைகள் அதனைக் குடிக்குது!



# ரோஜாப் பூ!

பூபூ என்னாப் பூ?
பூபூ ரோஜாப் பூ!
தோட்டம் முழுதும் ரோஜாப்பூ!

பூபூ என்னாப் பூ?
புதுசா பறிச்ச ரோஜாப்பூ!
அழகு அழகா ரோஜாப்பூ!
ஆசை கொள்ளும் ரோஜாப்பூ!

பூபூ என்னாப் பூ?
பூவிலே உசந்த ரோஜாப்பூ!
புன்னகை பூக்கும் ரோஜாப்பூ!
பூக்களின் ராணி ரோஜாப்பூ!

பூபூ என்னாப் பூ?
பூபூ ரோஜாப்பூ!
தோட்டம் முழுதும் ரோஜாப்பூ!



## அழகு நமக்குக் கல்விதான்!

உயர உயர மேடுதான்!
    உண்மை என்றும் உண்மைதான்!
அயரத் தயங்க வேண்டுமோ? - வீணே
    அஞ்சி வாழ வேண்டுமோ?

அஞ்சா உணர்வே வெற்றிதான்!
    அறிவும் வலிவும் கவசம்தான்!
நெஞ்சம் என்பது ஒன்றுதான் - அதில்
    நினைவுத் தெளிவு நன்றுதான்!

அழகு நமக்குக் கல்வி தான்!
    அன்பு நமக்குச் செல்வம்தான்!
பழகும் தமிழே பாட்டுதான்! - அதற்குப்
    பாரில் இல்லை ஈடுதான்!



## ஏன் பிறந்தாய் ?

வானில் கதிரோன் தோன்றி
    வழங்கும் ஒளியைப் பாராய்!
கானில் மலர்கள் பூத்துக்
    கமழ்த்தும் மணத்தை நுக்ராய்!

மலையில் பிறக்கும் நதியால்
    மண்பெறும் வளங்கள் எத்தனை?
உலகின் இயற்கை காட்டும்
    உண்மை தன்னை உணர்வாய்!

நீயும் பிறந்தது புவியில்
    நிறைய சாதனை செய்யவே!
நீயும் பிறந்தது புவிக்கே
    நிதமும் தொண்டு செய்யவே!



## ஆதவன்!

ஆதவன் என்பவன் பாட்டாளி! - அவன்
அனைத்தும் உயிர்க்கும் கூட்டாளி!
பூதலம் வானம் அண்டமெலாம் - அவன்
பொழியும் ஒளியில் உயிர்வாழும்!

ஆதவன் என்பவன் பொறியாளன்! - அவனே
அண்டம் இயக்கும் நெறியாளன்!
மாதம், வருடம், பருவமெலாம் - அவன்
வகுத்த படிதான் உருவாகும்!

ஆதவன் என்பவன் மெய்விளக்கு! அவனே
ஆண்டவன் ஏந்தும் கைவிளக்கு!
சோதியே, அறிவே அவன் வடிவம்! - அவனைத்
தொழுது வணங்குதல் நம்கடமை!



## எலுமிச்சம் பழம் !

மங்கள மான மஞ்சள் நிறம்!
மனதில் அமைதி கொடுக்கும் நிறம்!
எங்கும் எந்த விழாக்களிலும்
இடம்பெறும் பழமே இதுவாகும்!

ஆசான் அரசன் போன்றோர்கள்
அன்பால் ஏற்கும் பரிசுப்பழம்!
பூசை, மந்திர தந்திரத்தில்
பொருத்தமாய் அமைவதும் இப்பழமே!

கனியாய் நம்மிடம் வந்தாலும்
காயாய் மாறி ஊறுவதாம்!
இனிக்கும் பானம் என்றாலே
எலுமிச்சம் பழமே நினைவு வரும்!

ஏறும் சூரியன் வெப்பத்தால்
இரைப்பு களைப்பு மயக்கமெலாம்
மாறிக் குளுமை உடல்பெறவே
மருந்தாய் ஆவதும் இப்பழமே!



## கொண்டாடு!

கொண்டா டம்மா கொண்டாடு!
கும்பிடும் தெய்வம்போல் கொண்டாடு;
கண்டிடும் கடவுளாம் தாய்தந்தை - அவர்கள்
காலடி தொழுதே கொண்டாடு!

கொண்டா டம்மா கொண்டாடு!
கோயில் தெய்வமாய்க் கொண்டாடு!
அண்டை அயலார் அனைவரையும் - மெய்யாய்
அன்பாய் பண்பாய்க் கொண்டாடு!

கொண்டா டம்மா கொண்டாடு!
கொஞ்சும் கிளிமயில் குருவிகளை
உண்டு களிக்கப் பால் வழங்கும் - பசுவை
உறவாய் மதித்துக் கொண்டாடு!



## பூனைகள்!

பூனை எத்தனைப் பூனை? - எல்லாம்
பொழைக்கத் தெரிஞ்ச பூனை!
சேனைக் கணக்காப் பூனை! - பல
தேசி யத்துப் பூனை!

தாடிப் பூனை ஒன்று! - கொஞ்சம்
தடிச்ச பூனை ஒன்று!
மாடிப் பூனை ஒன்று! - கீழே
மட்டிப் பூனை ஒன்று!

குள்ளப் பூனை ஒன்று! - உள்ளே
குமுறும் பூனை ஒன்று!
கள்ளப் பூனை ரெண்டு! - முதலைக்
கண்ணீர்ப் பூனை ரெண்டு!

பட்டைப் பூனை ஒன்று! - ராகப்
பஜனைப் பூனை ஒன்று!
வெட்டிப் பூனை ஒன்று! - வெத்து
வேட்டுப் பூனை ஒன்று!

பூனை எல்லாம் பூனை - ரொம்பப்
பொழைக்கத் தெரிஞ்ச பூனை!
ஆனை கூட அஞ்சும் - ஆமாம்,
பானை சட்டித்தான் மிஞ்சும்!

## நூறு நூறு சீடை

நூறு நூறு சீடை!
நொறுக்கித் தின்னும் சீடை!
ஆரு கொடுத்த சீடை? - புதூரு
அத்தை கொடுத்த சீடை!

சீனி இனிப்புச் சீடை!
தேனாய்க் கரையும் சீடை!
ஏனம் போலப் பையில் - அத்தை
எனக்குக் கொடுத்த சீடை!

'கடக்கு' 'முடக்கு'ச் சீடை!
காரம் போட்டச் சீடை!
அடக்க முடியா ருசியை - எனக்கே
அதிகம் கொடுக்கும் சீடை!

பாலு, சுந்தர், மீரா
பங்கு கேட்கும் சீடை!
நாலு நாலாக் கொடுக்க - அவர்கள்
நட்பை வளர்த்த சீடை!

ராமி அத்தை கொடுத்த
ராஜா தின்னும் சீடை!
சாமி பேரைச் சொல்லித் - தின்னும்
சாக்லேட் போன்ற சீடை!

# இதயம் என்பதும்...!

இதயம் என்பதும் திரையானால் -
'எண்ணம்' என்பதே வரைபடமாம்!
எண்ணம் என்னும் வரைபடத்தில்
எழுதுக சத்திய உருவொன்றே!

இதயம் என்பதும் பொழிலானால் -
'எண்ணம்' என்பதும் மலராகும்!
எண்ணம் என்னும் மலரினிலே
என்றும் கமழ்க அன்புமணம்!

இதயம் என்பதும் யாழானால் -
'எண்ணம்' என்பதே பண்ணாகும்!
எண்ணம் என்னும் பண்ணதிலே
இறைவன் அருளே சுதியாகும்!

இதயம் என்பதும் விண்ணானால் -
'எண்ணம்' என்பதே எழுகதிராம்!
எண்ணம் என்னும் எழுகதிரில்
என்றும் சுடர்க அன்பொளியே!



# கணக்கு !

கணக்குத் தெரிய வேண்டும்! - நன்குக்
கற்றுத் தெளிய வேண்டும்!
பிணக்குப் பிழைகள் இன்றிக் - கணக்கைப்
பெரிதும் அறிதல் நன்றாம்!

ஒன்றாய், இரண்டாய் மூன்றாய்த் - தொடரும்
ஒவ்வொரு எண்ணும் கணக்கே!
என்றும் எங்கும் கணக்கே! - வாழ்வில்
எந்தச் செயலும் கணக்கே!

கூடும் எண்கள் தொகையே - கணக்கின்
குறிப்பால் வகுக்கும் எல்லை!
போடும் கணக்குத் தவறின் - எந்தப்
பொறுப்பும் கொடுக்கும் தொல்லை!

அறிவு என்பது சோலை! - அதற்கு
ஆண்டவன் கணக்கே வேலி!
நிறைவு என்பதும் கணக்கு! - ஞாயம்,
நீதி என்பதும் கணக்கே!



## பெரிய பாலம்!

உதயம் தோறும், நிமிடம் தோறும்
உனது வாழ்க்கை சிரிக்கவே
இதயம் தோறும் இன்பம் ஊற்றும்
இரகசி யத்தைக் கேளடா!

நேரம், நிமிஷம் காலம் அனைத்தும்
நினைத்து முயன்றே செயல்படு!
வீரம், சக்தி, வேகம் அனைத்தும்
விளைக்கும் விதையே எண்ணமாம்!

ஆடிப் பாடிக் கூடிக் குலவி
ஆசை நேசம் காட்டிடு!
தேடி வந்து பரிவு காட்டும்
தெய்வ அன்பே பொக்கிஷம்!

பிஞ்சு மழலைக் கொஞ்சம் தமிழைப்
பேசக் கேட்டு மகிழ்ந்திடு!
நெஞ்சு முழுதும் விளக்கு ஏற்றும்
நேச தேவதை குழந்தையே!

அழுத கண்ணீர் துடைக்கும் விரல்கள்
ஆண்ட வனின்தூ துவர்கள்!
பழுதி லாத பாசம் ஒன்றே
பாலம் பெரிய பாலமாம்!

## தாயே !

என்றைக்கும் துணை நிற்கும்
ஒரு தெய்வம் தாயே!
ஈடேதும் இணையேதும்
அற்றவள்தான் தாயே!

குன்றுக்கும் மனமிளக
அன்பளிப்பாள் தாயே!
கோவிலுக்குள் நடமாடும்
வடிவாவாள் தாயே!

பாலூட்டித் தாலாட்டும்
தாய்க்கு நிகர் தாயே!
பாராளும் மன்னனையும்
ஈன்றவள்தான் தாயே!

ஞாலத்தில் கண்கண்ட
முதல் தெய்வம் தாயே!
ஞானத்தின் பாசத்தின்
முதற் பள்ளி தாயே!



## பேனா!

பேனா அழகுப் பேனாவாம்!
பிரியம் மிக்கப் பேனாவாம்!
தேனாம் தமிழில் எழுதவே
தினமும் உதவும் பேனாவாம்!

முள்போல் எழுதும் பேனாவாம்!
மொத்தியாய் எழுதும் பேனாவாம்!
கல்போல் கனத்த பேனாவாம்!
காகிதக் கலப்பையே பேனாவாம்!

பச்சை நிறத்துப் பேனாவாம்!
பாங்கு மிகுந்த பேனாவாம்!
அச்சுபோல கையெழுத்தை
ஆக்கி வைக்கும் பேனாவாம்!



## வீடு!

வண்ண வண்ண வீடுகள் - நாம்
மகிழ்ந்து வாழும் வீடுகள்
எண்ண முடியா வீடுகள் - தெருவில்
எதிராய் எதிராய் வீடுகள்!

மாடி அமைந்த வீடுகள்! - வெறும்
மண்குடி சையாம் வீடுகள்
கூடி வாழும் வீடுகள் - ஓட்டுக்
கூரை வைத்த வீடுகள்!

மழையைத் தாங்கும் வீடுகள் - வாசல்
மணிஅ டிக்கும் வீடுகள்
குழாய்கள் வைத்த வீடுகள் - விளக்கு
கொத்துகள் தொங்கும் வீடுகள்!

நித்தம்நாமும் வாழவே - என்றும்
நிலைத்தி ருக்கும் வீடுகள்
சுத்த மாக வைத்திருந்தால் - என்றும்
சுகம் கொடுக்கும் வீடுகள்!



## தூயிலும் முன்...!

எத்தனை காடுகள்! எவ்வளவு அழகு!
இணைந்தும்; நெருங்கியும்; நிமிர்ந்தும்
உள்ளன
அத்தனையும் கடக்க விரைகிறேன் நானே!
ஆயினும், ஆயினும் இதய மூச்சால்
சத்திய மிட்டே நான்கொடுத் திருக்கும்
தக்கவாம் வாக்குறு திகளை எல்லாம்
மெத்தவும் மதித்தே காத்திட வேண்டும்!
மீண்டும் துயிலுமுன் நீண்டதென்
பயணம்!"



குறிப்பு : ஜவகர்லால் நேரு தமது கைப்பட எழுதி தம் மேஜையில் வைத்திருந்த ராபர்ட் ஃராஸ்ட் எழுதிய ஆங்கிலக் கவிதையின் தமிழாக்கமே இக்கவிதை.

## கப்பல்

காலம் என்னும் கடல்வழியைக்
    கடக்கும் கப்பல் வாழ்க்கையடா!
சால அதனை உந்துகின்ற
    சாகசக் காற்றே நம்முணர்வாம்!

நல்லது கெட்டது கண்டறியும்
    ஞால அனுபவப் பகுத்தறிவே
வல்ல வாழ்வுக் கப்பலதை
    வகையாய் ஓட்டும் மாலுமியாம்

உந்தும் காற்றே அற்றாலோ -
    ஓட்டும் மாலுமியை இழந்தாலோ -
வந்த இடமும் செல்விடமும்
    மயங்கிக் கப்பலே மூழ்கிவிடும்!



## தொப்பி

தொப்பிகள் எத்தனை தொப்பிகள்!
சொகுசு மிகுந்தத் தொப்பிகள்!
கப்பல் காரன் போலவும்
காவல் காரன் போலவும்
உப்பிக் குழிந்து மடிந்தே
உசந்து நிற்கும் தொப்பிகள்!

ஜோதி முருகன் தொப்பிச்
சுத்தப் பச்சைத் தொப்பி!
ஆதி பகவன் தொப்பி!
அழகு சிவப்பு தொப்பி!
தம்பி விசுவின் தொப்பித்
தவிட்டு நிறத்துத் தொப்பி!

கம்பிக் கோட்டுத் தொப்பி
கந்த சாமித் தொப்பி!
சுந்தர் போடும் தொப்பி
துப்பாக்கிக் காரன் தொப்பி!
இந்திரன் போடும் தொப்பி
இங்கிலீஷ் காரன் தொப்பி !

எண்ணம் நிறைந்த தொப்பிகள்!
ஏராள மான தொப்பிகள்!
வண்ண வண்ணத் தொப்பிகள்!
வடிவம் வேறாய்த் தொப்பிகள்!
கண்ணைப் பறிக்கும் வெயிலைக்
காக்க வந்தத் தொப்பிகள்!



# ஆடுவோம் !

இன்னல் வரினும் புன்னகை உதிர்ப்போம்!
இறப்பே வரினும் அறப்பகை எதிர்ப்போம்!
கன்னல் அனைய இன்மொழி உரைப்போம்!
கடமை ஒன்றிலே பொழுதெலாம்
கரைப்போம்!

உண்மை, அன்பு, வண்மை நாடுவோம்!
ஒழுக்கம் என்னும் விழுப்பம் தேடுவோம்!
திண்மை கொண்ட நன்மை போற்றுவோம்!
தீமை செய்யும் புன்மை தூற்றுவோம்!

நாடொறும் உடலின் நலத்தைப் பேணுவோம்!
நற்கலை பயின்று சற்குணம் பூணுவோம்!
பீடுறும் தொண்டால் கேடுகள் களைவோம்!
பிறவியின் பயனே அறமெனத் தெளிவோம்!

'தொல்லை' என்ற சொல்லை மறப்போம்!
    துட்டச் செருக்கை வெட்டி முறிப்போம்!
பொல்லாக் கோபப் பேயை அடிப்போம்!
    பொய்யாம் பாம்பை நையப் புடைப்போம்!

துன்பம் சூழினும் பண்பைத் துறவோம்!
    தோல்வி அடையினும் வாய்மை மறவோம்!
அன்புப் பாட்டை இன்புடன் பாடுவோம்!
    ஆனந்தக் கூத்தைத் தினம்தினம்
                                        ஆடுவோம்!



## நல்ல பொம்மை !

பொம்மை நல்ல பொம்மை! - கிழப்
பொக்கைச் சிரிப்புப் பொம்மை!
அம்மை தந்த பொம்மை! - பாரத
அம்மை தந்த பொம்மை!

நம்மை எல்லாம் மீட்டு - இந்த
நாட்டின் அடிமை ஓட்டி,
செம்மை செய்த பொம்மை! - புவிக்கே
தெய்வம் போன்ற பொம்மை!

கண்ணன் தந்த கீதை - புத்தர்
அண்ணல் தந்த போதம்
கண்ணைப் போன்ற குறள்கள் - மனிதக்
கருவாய்ப் பிறந்த பொம்மை!

ஏசு சொன்ன மொழிகள் - அன்பு
ஏந்தல் நபியின் வரிகள்
மாசு போக ஓதி - உண்மை
வணங்கி நின்ற பொம்மை!

சாதித் தீட்டு ஒழிய - எங்கும்
சமரசப் பாட்டு பொழிய
காதித் தொழில்கள் ஓங்க - நெறிகள்
காட்டிப் போன பொம்மை!

வெள்ளைக் கழுகை விரட்ட - அகிம்சை
வில்லை எடுத்த பொம்மை!
தள்ளிப் போக நினைத்தோர் - பங்கைத்
தந்து வாழ்த்திய பொம்மை!

நீசக் குண்டுகள் பாய்ந்து - ஆவி
நீத்து உடம்பு மாய்ந்தும்
தேசம் மேவும் மக்கள் - இதய
தீப மான பொம்மை!

பொம்மை நல்ல பொம்மை! - காந்தி
பூத்த முகத்துப் பொம்மை!
பொம்மை நல்ல பொம்மை! - அறத்தின்
பூர்வ புண்ணியப் பொம்மை!



# அழகு அழகுக் கோலம்!

அழகு அழகுக் கோலமாம்!
அச்சு அச்சாய்க் கோலமாம்!
பழகிப் பழகி அம்மாவும்
பாங்காய்ப் போடும் கோலமாம்!

ஆடும் மயிலைப் போலவும்
ஆசை ரோஜா போலவும்
வீடும் விளக்கும் போலவும்
விளங்கி மின்னும் கோலமாம்!

கிளியும் பழமும் போலவும்;
கிளையும் மரமும் போலவும்;
நெளியும் கோடும் புள்ளியும்
நெருங்கி இழைத்தக் கோலமாம்!

காவிச் சிவப்புக் கோலமாம்!
கருப்பு, மஞ்சள் கோலமாம்!
தூவி வைத்தப் பூக்களாய்த்
தூய வெள்ளைக் கோலமாம்!

இழுத்து இழுத்துச் சுழித்து
இங்கும் அங்கும் இணைத்து
அழுத்த மாகக் கைகளால்
அம்மா வரைந்த கோலமாம்!

குப்பி பாட்டி வாழ்த்தவும்,
கோபு, பாலு வியக்கவும்,
அப்பா கூட மகிழவும்
அம்மா போட்டக் கோலமாம்!



## கார்த்திகை நல்ல கார்த்திகையாம் !

மங்கல விளக்குகள் ஏற்றி வைப்போம்! - அழகு
மணிவி ளக்குகள் ஏற்றி வைப்போம்!
வெண்கல விளக்குகள் ஏற்றி வைப்போம்! -
பெரும்
வீதிவி ளக்குகள் ஏற்றி வைப்போம்!

குத்து விளக்குகள் ஏற்றி வைப்போம்! -
தொங்கும்
குலைவி ளக்குகள் ஏற்றி வைப்போம்!
சித்திர விளக்குகள் ஏற்றி வைப்போம்! - அகல்
சின்ன விளக்குகள் ஏற்றி வைப்போம்!

கூடம் முழுதும் ஏற்றி வைப்போம்! - தெருக்
குப்பை மேட்டிலும் ஏற்றி வைப்போம்!
மாடம் எங்கும் ஏற்றி வைப்போம்! - கொல்லை
மாட்டுக் கொட்டிலிலும் ஏற்றி வைப்போம்!

கார்த்திகை நல்ல கார்த்திகையாம்! - பகைக்
காரிருள் தொலைத்திடும் கார்த்திகையாம்!
சீர்த்தியுறு மிந்தக் கார்த்திகையில் - முருகன்
சேவடி வணங்கி ஆர்த்திடுவோம்!

சரவணப் பொய்கையில் பிறந்தவனை - தமிழ்
தந்தவனைத் தொழுதே சிறந்திடுவோம்!
பரவிப் பெருகுது புத்தொளிதான்! - இன்பப்
பண்ணி சைக்குது சித்த மெலாம்!

சொக்குப் பனைகள் கொளுத்திடுவோம்! - புது
ஜோதி கண்டு களித்திடுவோம்!
மக்களெலாம் மகிழ்ந் தாடிடுவோம்! - சக்தி
மைந்தன் பெரும்புகழ் பாடிடுவோம்!



## வேப்பமரம்!

புதிய வருடப் பிறப்பன்று
புசிக்கும் வேப்பம் பூரசத்தால்
எதிலும் கசப்பும் இடையுண்டாம்
என்பதை நாமும் உணர்கின்றோம்!

உலகே கருகும் வெயிலிலும்
உடலும் உள்ளமும் குளிரடைய
இலகும் பச்சைப் பந்தலிட்டே
இன்ப நிழலைத் தரும் வேம்பே!

பூவும் காயும் கசந்திடினும்,
பொன்னாம் கொழுந்தும் கசந்திடினும்,
நோவும் நச்சும் தீர்க்கின்ற
நுட்ப மருந்தும் வேம்பன்றோ?

காப்பாய் வீடு மனை செழிக்கக்
கண்படு 'திருஷ்டி'தனைக் கழிக்க
வேப்பிலைக் கொத்தின் பிடியன்றோ
விளங்கும் மந்திர சூட்சுமமாய்!

கோடிக் கணக்காய் மக்களிலே
கும்பிடத் தக்கவர் ஒருசிலரே!
மூடிக் கிடக்கும் காடதிலும்
முளைக்கும் வேம்பும் இரண்டொன்றே!

பூசை செய்தே தொழுவதிலும்,
புனிதம் என்றே புகழ்வதிலும்,
ஆசை கொண்டே வேம்பதனை
அழகாய் வளர்த்தல் நலமாகும்!



## அன்னையைப் போற்றிடுவோம் !

அன்னையைப் போற்றிடுவோம்! - முத்தமிழ்
அரசியைப் போற்றிடுவோம்!
இன்னுயிர் தன்னிலும் உன்னதம் பெற்றே
இப்புவி மொழிகளில் ஒப்புயர் வற்ற
(அன்னை)

தொன்மையால் புகழ் தோய்ந்து - தனித்
தூய்மையாம் நலம் வாய்ந்து,
நன்மறைக் குறளாய் பொன்னணி பூண்டு
நாலடி போல்பல நூலெழில் கொண்ட
(அன்னை)

கொம்புதரும் தனித்தேனாய் - சுவை
கூடிவரும் கனிச் சாறாய்,
கம்பனும், இளங்கோ நம்பியும் செய்த
காவிய வளங்கள் யாவும் எய்திய
(அன்னை)

ஓதும் சாதி இரண்டெனவே - இயற்கை
உயர் அறத்தால் பிரித்துரைத்த
நீதி ஒளவையின் போதம் மிளிரும்
நித்திய இளமையின் சத்திய ஒளிசேர்
(அன்னை)

நேரம், வாழ்வு, நினைவுகளை - அடிமை
நீக்கும் பணி தனக்கீந்த
வீரத் தணலாம் பாரதி பொழிந்த
வித்தகக் கவிதையால் புத்துயிர் கொழிக்கும்.
(அன்னை)

கொட்டுபறை முழக்கிடு வோம்! - வாரீர்
கொம்பெடுத் தூதிடு வோம்!
எட்டுத் திசையும் முட்டிச் சிலிர்த்திட
ஈடிலாத் தமிழ்ப் புகழ் பாடிக் களித்தே
(அன்னை)



# மகிழும் மனிதன்!

நெஞ்சில் நேர்மை எனக்குண்டு! - அழியா
நீதி வாய்மை எனக்குண்டு!
வஞ்சனைப் பகையைத் துரத்திடவே - வீர
வாளும் கவசமும் எனக்கவையே!

இன்புற மனிதப் பிறப்பெடுத்தேன்! - அறிவால்
ஏற்புறும் கல்வி சிறப்படைந்தேன்!
அன்புறும் நற்பணி நான்புரிவேன்! - எந்த
அயலவர் ஆணைக்கும் நான் பணியேன்!

ஆசைகள் என்னை ஆள்வதில்லை! - என்
ஆவி மகிழ்ந்திடும் மாள்வதற்கும்!
பாசம் பந்தம் அறுத்துவிட்டேன்! - வெறும்
பகட்டுப் புகழும் வெறுக்கின்றேன்!

குறுக்கு வழிகளில் உயர்ந்தவரைக் - கண்டே
குமுறும் பொறாமை வீணன்றோ?
தறுக்கு; தற்புகழ் நானறியேன்! - வறட்டுச்
சட்ட திட்டமும் நானறியேன்!

ஆண்டவன் ஒருவனே என் அரசன்! - அவனது
அன்பே கருணையே என் சட்டம்!
நீண்ட பிணைப்புகளில் விடுபட்டேன்! - எனது
நெஞ்சின் சாட்சிக்கே கடன்பட்டேன்!

துதியும் முகமனும் எனைக் கவரா! - பெரும்
சூதும் வாதும் எனையணுகா!
நிதியும் பரிசும் நான் வேண்டேன் - இறையை
நினைந்து தொழுதலே என்தொழிலாம்!

நன்னெறி நூல்களே என் துணையாம் - அருளை
நாடும் எவனும் என் தோழன்!
இன்னல் என்பது துளியுமின்றி - நாளும்
இன்பம் பொங்கவே வாழுகிறேன்!



## தெய்வ தினம்!

பாருக்கு இன்றொரு புனிததினம்! - தீய
பாபங்கள் கருகவரும் புண்யதினம்!
காருக்கு நிகர்மேனி வண்ணனாம் - அந்த
கண்ண பிரான் பிறந்திட்ட தெய்வதினம்!

சொல்லுக்குள் அடங்காத மாயப்பொருள் - சிறு
ஜோதியுருக் குழந்தையாய் வந்ததினம்!
வில்லுக்கொரு பார்த்திபனின் தேரோட்டி - கீதை
விளம்பியருள் செய்தவனின் ஜன்மதினம்!

பிள்ளைச் சிறு விளையாடல் ஆயிரமாய்ப் - புவி
பெரிதுவந்து வியந்திடவே செய்தவனாய்,
உள்ளமெலாம் கவர்ந்திடுமோர் ஆயமகன் - பிறந்த
உற்சவமே கொண்டாடும் இன்பதினம்!

தாம்புக்குள் கட்டுண்டே உரலிழுத்தே - பெற்றத்
தாய்க்குத்தன் திருவாயில் புவிகாட்டிப்
பாம்புக்கும் புலிக்கும் நெஞ்சிளக - குழல்
பண்ணிசை பொழிந்தவனின் நாமதினம்!

பெருங்குன்றம் கைசுமந்தே குடையாக்கி - இந்திரன்
பின்னடையப் புயல்மழையைத் தடுத்ததனால்
அருங்கன்று காலிகளுடன் ஆயர்களைக் - காத்த
அற்புதனாம் கண்ணனவன் பிறந்ததினம்!

கஞ்சனெனும் ஓர்பொல்லா வஞ்சகனை -
வதைத்தே
கருணையால் நல்லோர்க்கு வாழ்வளித்தோன்
கஞ்சமலர் திருவடிகள் தொழுதிட்டே கோகுலக்
கண்ணனாம் மணிவண்ணனைப் பாடும்
தினம்!



## ஆடிக் களிப்பில் புரளுங்கள்!

அந்திச் சூரியன் மறைந்தாச்சு!
அழகு நிலவும் வந்தாச்சு!
பந்தி பந்தியாய் பிள்ளைகளே,
பறவைச் சிட்டாய் வாருங்கள்!

பாட்டி கதையைக் கேட்கவா?
பானைச் சோற்றைத் தின்னவா?
நீட்டி முழக்கிப் பாடவா?
நினைத்ததை எல்லாம் பேசவா?

இல்லை இல்லை கட்டாயம்!
என்ன வைப்போம் பந்தயம்?
எல்லை இல்லாக் களியாட்டம்!
இன்றைக் கோர்புது விளையாட்டு!

அப்பன், பாட்டன் வளர்த்த கலை!
ஆண்மை திண்மை அளித்தகலை!
கப்பல் ஏறி வந்ததில்லை!
கன்னித் தமிழர் சொந்தக்கலை!

'கா மா' 'சோமா' விளையாட்டா?
கட்டை மட்டை வெறியாட்டா?
பூமா - பாமா பூப்பந்தா?
பொத்தல் கூடை ராக்கெட்டா?

ஏமாந் தீரோ இவைஎண்ணி!
எதுவும் அன்று இவைகளிலே!
ஆமாம்! "சடுகுடு" ஆட்டந்தான்!
அதுவே நமது விளையாட்டு!

சடுகுடு ஆட்டம் ஒன்றேதான்
தமிழர் ஆண்மை காட்டுவதாம்!
கெடுதலை இல்லை அதனாலே!
கிடைத்திடும் நன்மைகள் புதிதாக!

ஆட ஆட வலுவேறும்!
அங்கம் தோறும் பொலிவேறும்!
தேடக் கிடைக்கா வெற்றியெலாம்
திண்ணம் சடுகுடால் பெற்றிடலாம்!

அணியாய் அணியாய்த் திரளுங்கள்!
ஆடிக் களிப்பில் புரளுங்கள்!
பணியாய் அதனைப் பேணுங்கள்!
பண்டைப் புகழைப் பூணுங்கள்!



## நட்சத்திரம்...

தூர தொலை வானத்திலே
ஜொலி ஜொலிக்குது நட்சத்திரம்!
சுட ரடிக்குது நட்சத்திரம்!

யாரு படைச்ச நட்சத்திரம்?
எவரு படைச்ச நட்சத்திரம்?
ஊரு படைச்சவன்; உலகு படைச்சவன்
உண்டு பண்ணிய நட்சத்திரம்!
ஓடி வந்து பாருங்கடி!
உற்று உற்றுப் பாருங்கடி!!!

தூர தொலை வானத்திலே
ஜொலி ஜொலிக்குது நட்சத்திரம்!
சுட ரடிக்குது நட்சத்திரம்!!

யாரு படைச்ச நட்சத்திரம்?
இத்தனை கோடி நட்சத்திரம்?
நீரு படைச்சவன், நெருப்புப் படைச்சவன்
நேர்த்தியாய்ப் படைச்ச நட்சத்திரம்
நேரே வந்து பாருங்கடி!
நின்று நிமிர்ந்து பாருங்கடி!!

தூர தொலை வானத்திலே
ஜொலி ஜொலிக்குது நட்சத்திரம்!
சுட ரடிக்குது நட்சத்திரம்!!

யாரு படைச்ச நட்சத்திரம்!
இத்தனை அழகு நட்சத்திரம்?
பேரு அற்றவன் பெற்றெ டுத்தப்
பிள்ளை போன்ற நட்சத்திரம்!
பேசி வந்து பாருங்கடி!
பேசாத நட்சத்திரம் பாருங்கடி!!



## கும்மியடி பெண்ணே!

கும்மியடி பெண்ணே! கும்மியடி! - தோள்கள்
குலுங்கிடக் குலுங்கிடக் கும்மியடி!!

அம்மை உமை பாலன் ஆறுமுகவேலன்
ஆசைமிகு பொற்பாதம்
பூசையுறத் தொழுதே கும்மியடி!!

கும்மியடி கண்ணே! கும்மியடி! - இன்பம்
குலுங்கிடக் குலுங்கிடக் கும்மியடி!

நம்மருமைத் தாயகம் நாள்தோறும்
நானாவித வளமெல்லாம் தானாகவே
செழித்திடக் கும்மியடி!

கும்மியடி பெண்ணே! கும்மியடி! - சதங்கைக்
கொஞ்சிடக் கொஞ்சிடக் கும்மியடி!

செம்மையுறு தமிழ்மொழி தேசத்துக் கொருமொழி
சீருற்றே ஓங்கிநிதம்
பேர்பெற்றே விளங்கிடக் கும்மியடி!

கும்மியடி மானே! கும்மியடி! - செவிகள்
குளிர்ந்திடக் குளிர்ந்திடக் கும்மியடி!

கொம்மைமிகு பயிர்கள் கோதறவே -
விளைந்திங்கே
குவிகின்ற செல்வத்தால் கொண்டிடுவோம்
புதுவாழ்வெனக் கும்மியடி!!!



## பிள்ளையாரைப் பாருங்கள்!

பிள்ளைகள் யாவரும் வாருங்கள்!
    பிள்ளை யாரைப் பாருங்கள்!
சள்ளைகள்; கவலைகள் ஓடிவரும்!
    சாந்தியும் இன்பமும் கூடி விடும்!

வெல்ல மோதகம் படையுங்கள்!
    வேண்டித் தேங்காய் உடையுங்கள்!
நல்ல வரங்கள் யாசித்தே
    நாளும் தவறாமல் பூசிப்பீர்!

ஆடி வெள்ளித் தைவெள்ளி
    ஆவணி சதுர்த்தி நாட்களிலே
கூடி விநாயகரை நாம் தொழுதால்
    கோடி நன்மைகள் தேடிவரும்!

பிள்ளை யாரைப் பார்த்திட்டால்
    பெரிய உண்மை புலனாகும்!
பள்ளிக்கூடம் சொல்லாத
    பாடங்கள் விநாயகர் சொல்லிடுவார்!

தொந்திக் கணபதியைத் தொழும்போது
    தோப்புக் கரணங்கள் போடுகிறோம்!
அந்தி சந்தி வேளைகளில்
    அப்படித் தொழுதல் எதற்காக?

மனமும், நினைப்பும் ஒன்றாகி
    வளைத்துக் குந்தி எழுந்திட்டே
தினமும் "தோப்புக் கரணங்கள்"
    செய்வது சிறந்த உடற்பயிற்சி!

பிள்ளை யாரின் நாமங்கள்
    பேசும் அர்த்தம் பலவாகும்!
உள்ளம் மகிழும் வாழ்வுபெற
    ஒவ்வொரு பெயரும் 'மந்திரந்'தான்!

கடவுள் களுக்கே அவர் தலைவர்!
    "கணபதி" என்பதும் அதனால்தான்!
இடர்கள் களைவதால் "விக்கினத்தின்
    ஈஸ்வரன்" என்றும் பெயர் பெற்றார்!

ஆனை முகத்தை உடையவனாய்;
    ஐந்து கைகள் பெற்றவனாய்;
பானை வயிறும் உடையவனாய்
    பகவான் விநாயகர் விளங்குவதேன்?

காட்டு விலங்குகளில் யானைதான்
    கள்ள ஆசையால் கெட்டழியும்!
வீட்டு மக்கள் யாருக்கும்
    'விபரீத ஆசை'கள் கூடாதாம்!

ஆனை போலத் தின்றிட்டால்
அழகு கெட்டே உடல்பெருக்கும்!
பானை வயிறும் உண்டாகும்!
பார்ப்பவர் நகைக்கவே இடமாகும்!

எண்ணும் கருத்தில் மிருகம்போல்
இச்சை கொள்ளுதல் தீதன்றோ?
உண்ணும் சோறும் உண்டிகளும்
ஒழுங்காய் இருத்தல் நலமன்றோ?

தருமம் என்பதும் ஐந்தாகும்!
சாஸ்வத அறங்களும் அவையாகும்!
விரும்பித் தருமம் செய்வோர்கள்
விளக்கம் அவற்றால் பெறலாகும்!

ஒருசாண் வயிற்றுப் பசியேதான்
உலக வாழ்வில் முதல் துன்பம்!
வருவோர்; வறியோர் பசியகற்றல்
வள்ளல் அனைவருக்கும் முதற்கடமை!

நோயும், பிணியும் கொண்டவர்க்கே
நூறு வழிகளில் உதவிடுதல்
தாயைப் போலப் பேணிவரல்
தருமப் பிரபுவின் மறுகடமை!

இடுப்பில் உடுத்தும் துணிகூட
இன்றித் தவிப்போர் துயர்போக்கல்
கொடுப்பவர் கரங்களை உயர்த்திவிடும்!
கொடைகளில் இதுவே நற்கடமை!

கற்க வசதிகள்அற்றோரோ
காசினி தன்னில் மிகபேர்கள்!
நிற்கும் அறத்தில் கல்வியறம்
நிதிகள் மிகுந்தோர் உதவுதல் தான்!

ஏழை; எளியோர் வசிப்பதற்கே
இல்லம் அமைத்துத் தருவதுவும்
வாழும் வள்ளல்கள் பெருங்கடமை!
'வழங்கும் கைக'ளின் அருங்கடமை!

ஐந்து கரங்களால் விநாயகர்தான்
அருளும் இந்த சூட்சுமங்கள்
விந்தை யான கருத்தன்றோ?
விளங்கிக் கொள்ளுதல் நன்றன்றோ!

ஆதி மூல அண்ணலெனும்
ஆனை முகத்துப் பெருமானை
ஓதிப் பாடித் துதித்திட்டே
ஒவ்வொரு தினமும் மகிழ்ந்திடுவோம்!



வயலூர் சண்முகம் தமிழகத்தின் ஆற்றல்
மிக்க கவிஞர்களுள் முக்கியமானவர்
மின்னல் வெட்டும் வார்த்தைகளால்
எதையும் நுட்பமாக வெளிப்படுத்தும்
திறம் வாய்ந்தவர்.

தனித்தன்மை கொண்ட கவித்தன்மை
மிளிரும் மரபுக் கவிதைகளும் எளிய-புதிய
சந்தங்களில் இவர் இயற்றிய சிறுவர்
பாடல்களும் தமிழிலக்கியத்திற்கு
கிடைத்த மிகப்பெரும் கொடை என்பது
மிகையற்ற உண்மையாகும்.

கவிஞர் **சுரதா**

